








# ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரம்

(தமிழ்ப் பாடல்—பொழிப்புரையுடன் கூடியது)





வழங்குவோர் :

ஆட்கொண்ட விநாயகர் நற்பணி மன்றம்,

பள்ளத்தூர்.

இலவச வெளியீடு—1

1986

உ

ஸ்ரீ அபிராமி துணை

# ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரம்

(தமிழ்ப் பாடல்—பொழிப்புரையுடன் கூடியது)



வழங்குவோர் :

ஆட்கொண்ட விநாயகர் நற்பணி மன்றம்,
பள்ளத்தூர்.

மன்ற உறுப்பினர்கள் :

S. ராமசாமி,
சேலம்.

RMV. முருகப்பன்,
சென்னை

S. அருணாசலம்,
கல்கத்தா.

AN. அளகப்பன்,
பள்ளத்தூர்.

C. சோலையப்பன், திருச்சி.

இலவச வெளியீடு—1]                [1986

# முன்னுரை

பள்ளத்தூர் அள. கா. பொதுப் படைப்பு காண வந்திருக்கும் பெருமக்கள் அனைவரையும் ஆட்கொண்ட விநாயகர் நற்பணி மன்றம் வருக, வருக என்று வரவேற்று ஆதிசங்கரர் அருளிய ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரத்தையும், பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடிய இலக்குமி ஸ்தோத்திரத்தையும் அச்சிட்டு இலவசமாக வழங்குகிறோம்.

இம்மன்றம் பல நற்பணிகளைச் செய்யத் துடிக்கிறது. எல்லோரும் ஆசி வழங்க வேண்டுகிறோம்.

இந்த வெளியீட்டிற்கு மூலமும், தமிழ் பொழிப்புரையும் உதவிய ஸ்ரீ ராமதூதன் ஆசிரியர் N.S.R. சாமி, B.A., B.L., I.S. அவர்களுக்கும் வடமொழி ஸ்தோத்திரத்திற்கேற்ப தமிழ் பாடல்கள் வழங்கிய பள்ளத்தூர் திரு பண்டித மு. முத்து வேங்கடாசலம் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் சக்தி மிக்கது. இதனை உணர்ந்து தினமும் தவறாமல் பாராயணம் செய்தால் நல்ல பலன்கள் கிட்டும்.

இந்நூலை குறுகிய காலத்தில் நல்ல முறையில் அச்சிட்டு உதவிய ஸ்ரீ கணேச சாஸ்தா பிரிண்டர்ஸ், சேலம்-5 உரிமையாளர்களுக்கும், விளம்பரம் நல்கிய பெருமக்களின் நிறுவனங்கள் மென்மேலும் சிறந்தோங்க எல்லாம்வல்ல ஆட்கொண்ட விநாயகரை பிரார்த்தித்துக்கொள்கிறோம்.

பள்ளத்தூர்
22—8—86

இங்ஙனம்,
ஆட்கொண்ட விநாயகர்
நற்பணி மன்றம்.

---



பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா. —ஔவையார்

உ

ஸ்ரீ அபிராமி துணை

# ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்ரம்

அங்கம்ஹரேஹே புளகபூஷண மாச்ரயந்தீ
ப்ருங்காங்கனேவ முகுளாபரணம் தமாலம் |
அங்கீக்ருதாகில விபூதி ரபாங்கலீலா
மாங்கல்யதாஸ்து மம மங்கள தேவதாயாஹா ||

தங்கு முகுளத் தமாலம் விருப்புடன் சார்அளி போல்
சங்கேந்து கையன் புளகித அங்கம் தழுவி நின்றே
இங்கிப் புவியில் பலவாந் தனக்குவை ஈந்தருளும்
மங்கல இந்திரை கண்நோக்கு, அருளுக மங்கலமே.

பொழிப்பு : தங்க நிறப் பெண் வண்டானது, மொட்டுக்களால் அலங்காரம் செய்யப்பட்ட தமால மரத்தை மொய்த்திருப்பதைப்போல, மயிற் கூச்சலோடு கூடிய திருவேங்கடவன் திருமேனியை அடைந்ததாயும், எல்லாவகைச் செல்வங்களாலும் நிறைந்ததாயும் உள்ள மங்களத் தெய்வமான மஹாலட்சுமியின் கடைக்கண் பார்வை எளியேனுக்கு மங்களங்களை அளிப்பதாக ஆகட்டும்.

முக்தா முஹுர்விதததீ வதனே முராரேஹே
ப்ரேமத்ரபாப்ரணி ஹிதானி கதாகதானி |
மாலா த்ருசோர் மதுகரீவ மஹோத்பலே யா
ஸா மே ச்ரியம் திசது ஸாகர ஸம்பவாயாஹா ||

தோன்றெழில் நீல மலர்வந்து சென்றிடு தும்பியைப்போல்
ஆன்ற திருமால் வதனத்(து) அவாவோ டணைந்து பினர்
ஊன்றிடு நாணல் திரும்பும் விழியாள் உலகனை, பால்
சான்ற கடலுதித்தாள் நோக்கு அருள்க தனக்குவையே.

பொழிப்பு: பெரிய நீலோற்பல மலரில் பெண் வண்டானது மொய்ப்பதும், வெளிக் கிளம்புவதும், திரும்பி வருவதும்போல், திருவேங்கடவனின் திருமுகத்தை காதலால் காண்பதும், நாணத்தால் அகல்வதும், பின் பிரியத்தால் நோக்குவதுமான மந்தஹாசத்துடன் கூடிய பாற்கடற் கன்னியாம் திருமகளின் திருநோக்கு எளியேற்குத் தனக்குவை அளிக்கட்டும்.

ஆமீலிதாக்ஷ மதிகம்ய முதா முகுந்தம்
ஆனந்த கந்தமநிமேஷ மனங்கதந்த்ரம் |
ஆகேகரஸ்திதகநீ நிகபக்ஷ்ம நேத்ரம்
பூத்யை பவேன்மம புஜங்க சயாங்கனுயாஹா ||

உற்ற களிப்பால் சிறிதொரு பால்மூடு ஒளிவிழிகாண்
தற்பரனைச் சார்ந்து அளவில் ஆனந்தந் தனைவழங்கிக்
கற்றிடு காமன் கலைகொடு வாட்டுங் கருவிழியின்
பொறற்பமர் செய்யாள் அருள்நோக் கருளுக பூதியையே.

பொழிப்பு: ஆனந்தத்தால் கொஞ்சம் கண்ணை மூடிக் கொண்டிருக்கும் திருவேங்கடவனை அடைந்து இமை கொட்டாமலும், காதல் வயமானதும், ஆனந்தத்திற்கு மூலமும் கொஞ்சம் புரட்டப்பட்ட நீல விழி, இமை இவைகளை உடையதுமான திருமகளின் கண்ணனது எளியேற்கு எல்லா நலங்களையும் அளிக்கட்டும்.

பாஹ்வந்தரே மதுஜிதஹ ச்ரித கௌஸ்துபே யா
ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி |
காமப்ரதா பகவதோபி கடாக்ஷமாலா
கல்யாண மாவஹது மே கமலால யாயாஹா || 4

சீதரன் மார்பில் திகழ்கௌத் துபமுடன் சேர்ந்திலகி
ஏதமில் இந்திர நீல மணிவடம் ஏய்ந்ததென
ஓதிடும் எம்பெருமானுக் கனைத்தும் உவந்தளிக்கும்
மாதர் கமலை விழிநோக்கு அருளுக மங்கலமே.

பொழிப்பு: எந்தக் கடைக்கண் ணேக்கானது, மது என்ற அரக்கனை அழித்த திருவேங்கடவனின் திருமார்பில் விளங்கும் இந்திர நீலக் கற்களால் கட்டப்பட்ட கௌஸ்துப மணிமாலை போல் ஒளி அடிக்கிறதோ, அந்த ஹரி பகவானுக்குமே பெருந் திருவை வழங்கும் திருமகளின் கடைக்கண் பார்வையானது எனக்கு கல்யாணத்தைக் கொடுக்கட்டும்.

காலாம்புதாலி லலிதோரசி கைடபாரேஹே
தாராதரே ஸ்புரதியா தடிதங்கனேவ |
மாதுஹு ஸமஸ்தஜகதாம், மஹனீயமூர்த்திஹி
பத்ராணி மே திசது பார்க்கவ நந்தனுயாஹா ||

புடவி அளிக்குந் திருமாலின் காலாம் புதம் நிகர்க்கும்
இடமகல் மார்பினில் மின்னற்கொடிபோல் இனிதிலகிப்
படியனைத்திற்கும் அனையாகிப் பார்க்கவன் பாவையுமாய்ச்
சுடர் திருமேனி சுபந்தரும்; தோன்ருத் துணையவளே.

பொழிப்பு : திருவேங்கடவனின் நீருண்ட கரிய மேகக் கூட்டம்போல் அழகிய திருமார்பில், நீருண்ட கரிய மேகத்தில் மின்னற்கொடிபோல் எந்த உருவம் ஒளி வீசுகிறதோ, அவ்வாறு விளங்குபவளான எல்லா உலகங்கட்கும் மாதாவான வளும், பார்க்கவ மகரிஷியின் திருமகளுமான மஹாலட்சுமி யின் வணங்கத்தக்க திருவுரு எளியேனுக்கு மங்களங்களை அருளட்டும்.

ப்ராப்தம் பதம் ப்ரதமதஹ கலு யத்ப்ரபாவாத்
மாங்கல்யபாஜி மதுமாதினி மன்மதேன |
மய்யா பதேத் ததிஹ மந்தரமீக்ஷணார்த்தம்
மந்தாலஸம் ச மகராலய கன்யகாயாஹா || 6

செந்தா மரையாள் கடைக்கட் சிறப்பால் திகழ்மதனன்
எந்தை மதுசூதன் பாங்கர் முதலிடம் எய்தினனுல்;
மந்தாலசங்கொள் அரைக்கண் கடாட்சம் மகிதலத்தே
சிந்தாகுலங்கொள் அடியவன் மேல்விழச் செய்குவளே.

பொழிப்பு : எந்தப் பார்வையின் பெருமையால் மங்களங் கட்கெல்லாம் இருப்பிடமானவரும், மது என்ற அரக்கனை மடித்தவருமான திருவேங்கடவனிடம் முதன்முதலாக மன் மதனுக்கு இடம் கிடைத்ததோ, அந்த கடற்கன்னியான கமலையின் மந்தாலஸமான அரைப் பார்வை எளியேன் மேற் கொஞ்சம் விழட்டும்.

விச்வாமரேந்த்ரபத விப்ரமதான தக்ஷம்
ஆனந்தஹேது ரதிகம் முரவித்விஷோபி ।
ஈஷந்நிஷீதது மயிக்ஷண மீட்சணர்த்தம்
இந்தீவரோதர ஸகோதர மிந்திராயாஹா ॥ 7

இந்திரன் ஆட்சியும் தன்னடியார்க் கினிதளித்தே
அந்தத் திருமாற் களவிலா னந்தம் அணைந்திடச் செய்து
இந்திர நீலமலரின் இடைக்கு நேர் எய்திய சீர்
இந்திரை கண்நோக்கு அரை சற்றுத்தங்குக! என்மிசையே.

பொழிப்பு: எல்லாத் தேவர்கட்கும் அதிபதியாக விளங்கும் இந்திரப்பதவி, சக்ரவர்த்தித் தன்மை இவைகளை இந்த உலகிலேயே தன் அடியார்கட்கு வேடிக்கையாகக் கொடுக்கும் சாமர்த்தியம் உள்ளதும், முரன் என்ற அசுரனை அழித்த திருவேங்கடவனுக்குங்கூட எல்லையில்லா ஆனந்தப் பெருக்கிற்குக் காரணமானதும், நீலோத்பல மலரின் உட்புறம் போன்றதுமான திருமகளின் கடைக் கண்ணின் பாதியானது ஒரு க்ஷணம் எளியேன்மேல் விழட்டும்.

இஷ்டாவிசிஷ்ட மதயோபி யயா தயார்த்ர
த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டபபதம் ஸுலபம் லபந்தே ।
த்ருஷ்டிஹி ப்ரஹ்ருஷ்ட கமலோதர தீப்திரிஷ்டாம்
புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கர விஷ்டராயாஹா ॥

யாகம் பல செய்து இதயம் புனிதம் அடைதல் இலா
வேக மனிதரும் நின்தயை நோக்கால் மிக எளிதே
மாகத் ததிபதி ஆகுவர்; அத்தாமரை நடுப்போல்
ஆகும் ஒளி விழி, எண்வகைச் செல்வம் அருளுகவே.

பொழிப்பு: வேள்விகள் வேட்கும் வேட்கையற்ற பாவிகட்கும்கூட கருணையினால் நனைந்த எந்தப் பார்வை சுவர்க்க லோக வாழ்வை எளிதாக நல்குமோ, அந்த மலர்ந்த தாமரை மலரின் நடுப்பாகம் போன்ற திருமகளின் திருப்பார்வை எளியேனின் விருப்பங்களை அருளட்டும்.

தத்யாத் தயானுபவனோ த்ரவிணும்பு தாரா-
மஸ்மின்ன கிஞ்சன விஹங்கசிசௌ விஷண்ணே ।
துஷ்கர்ம கர்மமபனீய சிராய தூரம்
நாராயணப்ரணயினீ நயனும்புவாஹஹ ॥ 9

தரித்திர மேவித்தளர்சா தகப்பிள்ளைத் தன்மையனுக்(கு)
எரித்திடு தீவினைக் கோடை வெப்பத்தை இனிதொழித்துக்
கருத்தாய்க் கருணை வளியுடன் கூடுநின் கட்புயலும்
அருத்தியின் வெள்ளக் கனகமழைபெய் தருளுகவே.

பொழிப்பு: கருணையாகிற அனுகூலக் காற்றுடன் கூடிய திருமகளின் கண்களாகிற நீருண்ட மேகம், தரித்திரத்தால் கஷ்ட்டப்பட்டு எய்த்துத் தளர்ந்த இந்த ஏழையான சாதகக் குஞ்சுவினிடத்தில், வெகு நாட்களாக ஏற்பட்ட பாவ கர்ம மாகிற தாபத்தை வெகு தூரத்தில் போக்கி, வெள்ளக்கனக மழை பெய்து அருளட்டும்.

கீர்தேவதேதி கருடத்வஜ சுந்தரீதி
சாகம்பரீதி சசிசேகர வல்லபேதி ।
ஸ்ருஷ்டிஸ்திதி ப்ரளயகேளிஷு ஸம்ஸ்திதாயா
தஸ்யை நமஸ்த்ரிபுவனைக குரோஸ்தருண்யை ॥

படைக்கும் பிராமியாய்க் காக்கும் திருவாகிப் பார்மகளாய்த்
துடைக்கும் மதிமுடி வல்லபையாய் முத்தொழில்புரிந்து
நடிக்கும் பல பெயர் பூண்டவளே! இந்த நானிலத்திற் (கு)
அடுக்குங் குருவின் மனைவி! நின் பாதம் அடைந்தனனே.

பொழிப்பு: படைத்தலைச் செய்யுங்கால் கலைமகள் என்றும், காத்தலைச் செய்யும்போது அலைமகள் என்றும், அழித்தலைச் செய்யும்போது பிறைசூடிய பெருமானான பரம சிவனின் மனைவியாம் மலைமகளான தலைமகள் என்றும், விளங்குபவளும், மூவுலகிற்கும் தந்தையாம் திருவேங்கடவனின் பத்தினியான திருமகளை வணங்குகிறேன்.

ச்ருத்யை நமோஸ்து சுபகர்ம பலப்ரஸூத்யை
ரத்யை நமோஸ்து ரமணீய குணார்ணவாயை ।
சக்த்யை நமோஸ்து சதபத்ரநிகேதனாயை
புஷ்ட்யை நமோஸ்து புருஷோத்தம வல்லபாயை

நலத் தொழிலின் பயன்கூட்டும் நான்மறைத்தாய் அடிபோற்றி
புலங்கவருங் குணக்கடலாய் பொலிரதியின் கழல் போற்றி !
தலம்புகழும் நூற்றிதழ்த் தாமரைச்சத்திதாள் போற்றி !
பொலன் துதில்சேர் பெருமானின் புஷ்டியனை பதம்போற்றி !

பொழிப்பு : வேதவடிவானவளுக்கு வணக்கம், உயிர்கட்கு நல்ல கர்மாவின் பலத்தைக் கொடுக்கின்றவளுக்கு வணக்கம். அழகிய குணங்கட்கு இருப்பிடமான ரதிதேவியான தங்கட்கு வணக்கம். தாமரையில் அமர்ந்த சக்தி உருவான தங்கட்கு வணக்கம், புருஷோத்தமனின்—திருவேங்கடவனின் பத்தினியாம் புஷ்டி தேவியான தங்கட்கு வணக்கம்.

நமோஸ்து நாளீகநிபானனாயை
நமோஸ்து துக்தோததி ஜன்மபூம்யை ।
நமோஸ்து ஸோமாம்ருத ஸோதராயை
நமோஸ்து நாராயண வல்லபாயை ॥

மரைநேர் தரும்ஆ னனமே(வு) அனையே
ஒருபாற் கடலில் வருவாய் சரணம்
வருஇந்(து) அமுதோ டெழுவாய் சரணம்
திருநா ரணன்கா தலியே சரணம்.

பொழிப்பு : தாமரைபோன்ற முகமுள்ள தேவிக்கு வணக்கம். திருப்பாற்கடலில் தோன்றிய தேவிக்கு வணக்கம். சந்திரன், அமுதம் இவைகளோடு தோன்றிய தேவிக்கு வணக்கம். ஸ்ரீ மந்நாராயணன்—திருவேங்கடவன் காதலியாம் தேவிக்கு வணக்கம்.

நமோஸ்து ஹேமாம்புஜ பீடிகாயை
நமோஸ்து பூமண்டல நாயிகாயை |
நமோஸ்து தேவாதி தயாபராயை
நமோஸ்து சார்ங்காயுத வல்லபாயை || 13




ஏமக்கமலத் தெழிலே சரணம்
பூமண் டலநா யகியே சரணம்
காமன் அமரர்க் கருள்வாய் சரணம்
சாமன் மகிழ்வல் லபையே சரணம்.

பொழிப்பு: தங்கத் தாமரையை இருப்பிடமாக உடைய தேவிக்கு வணக்கம். பூமண்டலத்திற்குத் தலைவியான தேவிக்கு வணக்கம். வானவர்முதல் எல்லோர்க்கும் அருள் புரிபவளான தேவிக்கு வணக்கம். சார்ங்கம் என்ற வில்லை ஆயுதமாகத் தரித்த திருவேங்கடவனின் காதலியான தேவிக்கு வணக்கம்.

நமோஸ்து தேவ்யை ப்ருகுநந்தனாயை
நமோஸ்து விஷ்ணோருரஸி ஸ்திதாயை |
நமோஸ்து லக்ஷ்ம்யை கமலாலயாயை
நமோஸ்து தாமோதர வல்லபாயை || 14

ப்ருகுவின் மகளாம் பிணையே சரணம்
பரமன் தாமோ தரன்வல் லபையே
வரமார் கமலா லய, மா! சரணம்
திருமால் உரமே திகழ்வாய் சரணம்.

பொழிப்பு: பிருகு மகரிஷியின் மகளான தேவிக்கு வணக்கம். மகாவிஷ்ணுவான திருவேங்கடவன் திருமார்பில் இருக்கும் தேவிக்கு வணக்கம். தாமரை மலரை இருப்பிட மாகக்கொண்ட லட்சுமி தேவிக்கு வணக்கம். தமோதர மூர்த்தியான மஹா விஷ்ணுவின் காதல் தேவிக்கு வணக்கம்.

நமோஸ்து காந்த்யை கமலேக்ஷணாயை
நமோஸ்து பூத்யை புவனப்ரஸூத்யை
நமோஸ்து தேவாதி பிரர்ச்சிதாயை
நமோஸ்து நந்தாத்மஜ வல்லபாயை || 15

தண்டா மரைவாழ் ஒளியே சரணம்
அண்டம் பெறுபூதி கொள்இந்திரையே
விண்ணோர் தொழும் ஆரமுதே சரணம்
கண்ணன் உயிர்க்கா தலியே சரணம்.

பொழிப்பு: ஒளி வடிவான தேவிக்கு வணக்கம். தாமரைக் கண்ணியான தேவிக்கு வணக்கம். செல்வ வடிவான தேவிக்கு வணக்கம். உலகைப் படைப்பவளான தேவிக்கு வணக்கம். தேவர் முதலானவர்களால் வணங்கப்பட்ட தேவிக்கு வணக்கம் நந்தகோபரின் மகனான கோபாலனின்-திருவேங்கடவனின் பிரிய தேவிக்கு வணக்கம்.

ஸம்பத்கராணி ஸகலேந்த்ரிய நந்தனானி
ஸாம்ரார்ஜ்யதான விபவானி ஸரோருஹாக்ஷி |
த்வத் வந்தனானி துரிதாஹரணோத்யதானி
மாமேவ மாதரநிசம் கலயந்து மான்யே || 16

அன்னை வனச விழிபடைத்தோய் பூசனைக்குரியோய் !
மன்னுந் தனந்தரும், ஐம்புல இன்பம் மகிழ்ந்தளிக்கும்,
துன்னு மணிமுடி ஆட்சி வழங்கும், துயர் தொலைக்கும்
நின்னை வந்தித்தல்; உணர்ந்தேன் அதுசெய நீ அருளே.

பொழிப்பு: தாமரை மலர்போன்ற கண்களையுடைய தாயே, எல்லோராலும் வணங்கப்படும் மாதாவே, எல்லா வகையான செல்வங்களையும் தரும் ஐம்புலன்கட்கும் ஆனந்தத்தை தரச்செய்வதும், அரச பதவியையே அளிப்பதும், எல்லாப் பாவங்களையும் போக்குவதும் ஆன தங்கட்குச் செய்யும் வணக்கங்கள் அம்மையே என்னை எப்போதும் காக்கட்டும்.

யத்கடாக்ஷ ஸமுபாஸனவிதிஹி
சேவகஸ்ய ஸகலார்த்தஸம்பதஹ |
ஸந்தனேதி வசனங்கமான ஸைஹி
த்வாம் முராரிஹ்ருதயேச்வரீம் பஜே || 17

கமலைநின்றன் கடைக்கணருள் கனிவொடுளங் கருதுசெயல்
விமலை உலகினில் விரும்பும் செல்வமெலாம் விரைந்தளிக்கும்.
கமல விழிக் கடல்வண்ணன் மார்பு வளர் காந்தை நினை
அமையு மன மொழி மெய்யால் அனவரதம் வணங்குவனே

பொழிப்பு: தாயே! எந்த உன்னுடைய கடைக்கண் பார்வையை தியானம் செய்தால், (அவ்விதம் செய்பவனுக்கு) எல்லாச் செல்வங்களையும் ஏராளமாகக் கொடுக்குமோ, அந்த முராரியான திருவேங்கடவனின் இதய நாயகியான தங்களை மனம், மொழி, மெய்யால் எப்போதும் இடைவிடாது வணங்குகிறேன்.

ஸரஸிஜநிலயே ஸரோஜ ஹஸ்தே
தவள தமாம்சுக கந்தமால்யசோபே |
பகவதி ஹரிவல்லபே மனேக்ஞே
த்ரிபுவனபூதிகரி ப்ரஸீத மஹ்யம் || 18

பங்கயத்தில் உறைபவளே! பங்கயங்கைக் கொண்டவளே!
தங்கிடு வெண்ணிற ஆடை, மாலை கந்தம் தரித்தவளே!
மங்கை யருள் பகவதி! நாரணன் மனைவி! மனமறிவோய்
தங்குயிர்க்குப் பூதி தரும் தாய்! என்பால் தயை புரிக!

பொழிப்பு: தாமரையை இருப்பிடமாக உடையவளே! தாமரையைக் கையில் உடையவளே அதிக வெண்மையான பட்டாடை சந்தனம், மாலை இவைகளால் ஒளி வீசுகின்றவளே, மஹிமை வாய்ந்தவளே! திருவேங்கடவனின் திருவே! எல்லோருடைய மனத்தையும் அறிபவளே! மூவுலகங்கட்கும் செல்வங்களை வாரி வழங்குபவளே! எளியேற்கும் கருணை செய்.

திக்கஸ்திபிஹி கனககும்ப முகாவஸ்ருஷ்ட
ஸ்வர்வாஹினீ விமலசாரு ஜலாப்லுதாங்கீம் ।
ப்ராதர்நமாமி ஜகதாம் ஜனனீமசேஷ
லோகாதி நாதக்ருஹிணீமம்ருதாப்தி புத்ரீம் ॥

செம்பொற்குடத்தினில் கங்கைநீர் மொண்டு திசைக்கயங்கள்
அம்மை! நீராட்ட நனைதிருமேனி அழகுடையாய்
செம்மல் உலகப் பெருநாதன் தேவிசெகம் படைத்தோய் !
பம்பு பலாழி மகள் நினைக்காலை பணிகுவனே.

பொழிப்பு : திக்கஜனங்களினால் தங்கக் குடங்களில் விடப் பட்ட தேவ கங்கையின் நிர்மலமானதும் பரிசுத்தமானதுமான நீரைக்கொண்டு அபிஷேகம் செய்யப்பட்டு நனைந்த தூய்மை யான திருமேனியை உடையவளும், உலகங்கட்கெல்லாம் அன்னையும், உலகுக்கெல்லாம் நாயகனான திருவேங்கடவனின் மனைவியும், திருப்பாற்கடலின் மகளாகவும் விளங்கும் மஹா லட்சுமியை வைகறைப் பொழுதான அதிகாலையில் வணங்கு கிறேன்.

கமலே கமலாக்ஷ வல்லபே த்வம்
கருணாபூர தரங்கிதை ரபாங்கைஹை ।
அவலோகய மாமகிஞ்சனானாம்
ப்ரதமம் பாத்ரமக்ருத்ரிமம் தயாயாஹா ॥ 20

அருண நிறத்தா மரைக் கண்ணன் தேவி !
கருணை வெள்ள மோதுங் கடைக்கண்-திருமலரால்
ஏழ்மை தனில் முன் இடம் பெற்ற என்றனை நீ
தாழ்வின்றி நோக்கி யருள் தா.

பொழிப்பு : தாமரை மலரில் வாழும் லெட்சுமி தாயே ! தாமரை மலர்போலும் கண்களையுடைய திருவேங்கடவன் காதலியான திருமகளே ! கருணை வெள்ளத்தின் அலைமோதும் உன் கடைக்கண் பார்வையால், ஏழ்மையில் முதலிடம் பெற்றவனும், உனது கருணைக்கு உண்மையான பாத்திரனான வனும் ஆன எளியேனைக் கொஞ்சம் பார்த்தருள்.

ஸ்துவந்தி யே ஸ்துதி பிரமீபிரன்வஹம்
த்ரயீமயீம் த்ரிபுவனமாதரம் ரமாம் |
குணுதிகா குருதர பாக்யபாகினஹ
பவந்தி தே புவி புதபாவிதாசயாஹா || 21

சுருதி மூன்றுருவாகி மூவுலகமுந் தொழுந்தாய்
திருவினுளை இத்துதியினுல் துதிப்பவர் செகத்தே
மருவி நற்குணம், எண்ணிரு பேறுகள் வாய்ந்தே
சரத ஞானமுற்(று) எம்பிரான் திருவடி சார்வார்.

பொழிப்பு: வேத உருவானவளும், மூவுலகத்திற்குந் தாயானவளும் ஆகிய திருமகளை இந்த ஆதி சங்கர ஞானியின் அருள்மிகு பாடல்களால் எப்பொழுதும் துதிக்கின்றவர்கள் யாவரும் இவ்வுலகில் எல்லா குணங்களாலும் உயர்ந்து நிறைந்தவர்களாயும், பதினறுபேறுகளையும் பெற்றவர்களாயும் புலவர்களாலும் கொண்டாடும் புகழோடு கூடின அறிவாளிகளாகவும் ஆவர்.

ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரம் முற்றும்.



பரித்ராணுய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தா பநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||
(கீதை 4—8)

(நல்லோரைக் காப்பதற்கும், தீயோரைக் கரந்தொடுக்குவதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் யுகம்தோறும் நான் அவதரிக்கிறேன்.

உ

ஸ்ரீ அபிராமி துணை

பாடுவார். **முத்தப்ப செட்டியார்** பாடியது.

---

நீங்காத செல்வம் நிறைந்திருக்க இதனைப்
படித்தல் நலம்.

காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக்கொண்டிருக்கும் வேள்வணிகர் வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமியே
என்றைக்கும் நீங்கா திரு.

நின்மேலுமாணை நின்மகன் மேலுமாணை
நின்மாக் கொழுநன்
தன்மேலுமாணை தமிழ்மேலுமாணை தவமாவணிகச்
சின்னஞ்சிறுவர் தெரியாத காளையர் என்செயினும்
பின்னும் பொறுத்திருப்பாயே பெரிய இலக்குமியே

நீங்காது நின்மகனும் நெடிய திருமாலும்
பாங்காக அன்றுவந்த பாற்கடல்போல்-தேங்காமல்
நன்ருக நீயிருந்து நாளும் வளம் பெருக்கி
என்றைக்கும் நீங்கா திரு.

